ஓம்

திருச்சிற்றம்பலம்

# இலக்கண இலக்கியத் திறவுகோல்

இது

சென்னை, பச்சையப்பன் கலாசாலைத்
தமிழ்ப் போதகாசிரியர்
மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள்

எழுதிய

முன்னுரையுடன்

சென்னை
ஆதிமூலம் அச்சியந்திர சாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

துந்துபி-வரு ஆனி-மீ

விலை அணா 7.

1157.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ILAKKANA

# இலக்கண

ILAKKIYAT TIRAVUKOL

# இலக்கியத் திறவுகோல்

இது

சென்னை, பச்சையப்பன் கலாசாலைத்

தமிழ்ப் போதகாசிரியர்

மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள்

TIRUNAVUKKARASU MUDALIYAR

எழுதிய

முன்னுரையுடன்

சென்னை

Madras

ஆதிமூலம் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

துந்துபி-௵ ஆனி-மீ

விலை அணா 7.

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை.



சொற்பொருளைத் துணிந்தறிதற்கும் பொருள்களை உள்ளவா றுணர்தற்கும் இலக்கணங் கருவியாகும். இலக்கணவறிவில்லார் பொருளுண்மை உணர்தல் அரிது. அன்றியும் இலக்கணங் கற்றோர் முன் அது கல்லாதார் கவினழிந்து நிற்பர். இதுபற்றன்றே, 'எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும் எழுத்தறிவார் காணினிலையாம்' என்று சிவப்பிரகாச சுவாமிகளும் அருளிச் செய்வாராயினர். இலக்கண நூலைக் கண்ணோடு ஒப்பித்துக் கூறி அதன் இன்றியமையாப் பெருஞ்சிறப்பை இனிது விளக்கினர் திருவள்ளுவ தேவரும். 'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங் கண்ணென்ப வாழும் உயிர்க்கு' இதுபோல் வரும் ஆன்றோர் வாக்குக்கள் அளவிறந்தன.

இனி, இலக்கண நூல்களின் பயனைக் கூறுமிடத்து ஆசிரியர் அவை வீடு பேற்றைப் பயக்கு மாற்றினையும் உறுதிப் பொருள் நான்கினையும் அளித்தலையும் எடுத்திசைத்து அதன் மிக்க விழுப்பத்தைத் தேற்றினர்.

'எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறப்பா னாகும்—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.'

'அறம் பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே' என்ற திருவாக்குக்களை நோக்குக. இன்னோரன்ன காரணங்களான் இலக்கண அறிவின் இன்றியமையாச் சிறப்பு நன்கு விளங்கும். அற்றேல்,

'சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கவைபிதற்றும்
பித்தரிற் பேதையா ரில்'

என்று கூறியது எற்றுக்கெனில், அது இலக்கணக் கருவியாதலை யறியாது, அதனையே வாழ்நாள்காறுங் கற்று, அதனால் எய்துதற் குரிய உறுதிப்பொரு ளுணர்ச்சியை யடையாதாரைக் குறித்துக் கூறியதேயன்றி இலக்கண வறிவை இழித்துக் கூறியதன்றாதலின் அது பற்றிவரக் கடவதோர் இழுக்கில்லை யென்க.

இலக்கண நூல்களைப் பன்னாள் கற்றுவல்ல புலவர்பால் கேட்டறிந்தும், சிலர் இலக்கணப் பிழை பொருந்துளுமாறு எழுதுதலையும் இலக்கண மிருந்த மூலையுங் கண்டறியாதார் சிலர் இலக்கண வழுவின்றி எழுதுதலையுங் கண்கூடாகக் காண்கின்றோம். அதற்குக் காரணம் யாதெனின், இலக்கணங் கற்ற துணையானே அவ்வறிவு கைகூடுவதன்று; பலகாலும் இலக்கியங்களில் பழகி அவ்விதிகள் அமையுமாற்றை அறிந்துணர்தல் வேண்டும். கல்லாதார் பழகுவதனால் சிறிது அவ்வறிவு வாய்ப்பப் பெறுகின்றனர். கற்றார் அஃதின்மையால் சூத்திரங்களை யாரேனும் கேட்பின் நெட்டுருச் செய்தபடி எடுத்துரைப்பாரே யன்றிப் பொருத்துமாறு தெரியாது

விழிப்பர் என்பதாம். இதனால் இலக்கண ஞானம் பழகுவ தால் பெருகி வளரும் என்பது இனிது புலப்படும்.

இலக்கணத்தை எழுத் தெண்ணிப் படித்த சுவாமிநாத தேசிகர் தாமியற்றிய இலக்கணக்கொத்தின் பாயிரத்தின் கண் இலக்கண நூற் கற்கு முறையை நன் கெடுத்து மொழிந்தனர். அது பின் வருவது:

"சிலநாட் பழகிற் சிலவும் பலியா
பலநாட் பழகிற் பலிக்கு மென்க.
விரைவாற் பார்க்கிற் றெறியா தொன்றும்
விரையா தேற்கிற் கருநா தென்க.
வருவதிற் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததிற் சிந்தையைச் சிந்தா திருக்குக.
நூலினை மீளவும் நோக்க வேண்டா
சூத்திரம் பல்காற் பார்க்கவே துணிக.
மாறிமேபோற் கொடுப்பினு மந்தனை விட்டுக்
கூரியனுடனே கொடுத்தும் பழகுக."

நூலில் பல்காற் பழகும் பொருட்டு, 'இலக்கண விலக்கியத் திறவுகோல்' என்னும் இந்நூல் இயற்றப்பட்டது. பழகும் நூல்களும் சிறந்தனவாக இருத்தல் வேண்டும். அங்ஙன மாயினுலன்றி எல்லா விதிகளுக்கும் இலக்கியங் கிடைப்பது அரிதாகும். இக்கருத்தே பற்றி யன்றே, இலக்கணக் கொத்தாசிரியர், 'பல்காற் பழகினுந் தெரியா வுளவேற், தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார் மூன்றினும் முழங்கும்' எனக் கூறுவாராயிற் றென்க. இவ் வுண்மை கடைப்பிடித்தே இந் நூலாசிரியர் திருக்குறளுக்கு எழுதுவா ராயினர். இதன்கட் திருக்குறளை மாணக்கர் இலக்கணத் தேர்ச்சியின் பொருட்டுக் கற்குமுறை இன்னதெனத் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு திருக்குறளி

னுங் காணப்படும் அரிய இலக்கண விதிகளைச் செவ்வி தின் உளங் கொளும்படி எழுதியிருக்கும் அவரது வன்மை பாராட் டுக் குரியது. ஆங்காங்குச் சில வினாக்களையும் மாணாக்கர்க்கு அறிவு பெருகும் பொருட்டு எழுப்பி யுள்ளார். அவை கற் போருக்குப் பெரிதும் வேண்டப்படுவனவாகும். சொல் லிலக்கணமே யன்றிச் செய்யு ளிலக்கண விதிகளையும் அணி யிலக்கணப் பொருள்களையும் ஒருங்கு சேர்த்துக் கூறி யிருக் கின்றனர். நன்னூல் சூத்திரங்களையுங் குறிப்பிட் டுள்ளார். இந்நூல் மாணவர்க்கே யன்றி ஆசிரியர்க்கும் பெரும் பயன் விளைக்கு மென்பதிற் சிறிதும் ஐயமில்லை. இதுபோல் பேரிலக்கியங்களாகவுள்ள வேறு சில நூற்களுக்கும் இவ் வாறே இந்நூலாசிரியர் சில பாகங்கட்கு எழுதியுள்ளார் என அறிகின்றேன். திருக்குறள் பத்து அதிகாரங்களுக்கு இத் திறவுகோல் எழுதப்பட் டுள்ளது.

இந்நூலாசிரியர் இன்னாரென் றும் அவரைப் பற்றிய வரலாறு இன்னதென் றும் தெரியவில்லை. நூல் எழுதப் பட்டிருக்கும் தன்மையில் அவர் சிறந்த புலமை யுடையவர் என்பதும், பன்னூ லாராய்ச்சி யுடையவ ரென்பதும், தெளி வுடையவ ரென்பதும், கற்பிக்குந் திறனுடையவர் என்பதும் நன்கு விளங்குகின்றன. இதன் ஆசிரியர் கருத்து முற்றுப் பெறுமாறு செய்து, தமிழ் உலகு பயன் பெறுவதாக.

இங்ஙனம்,

மணி. திருநாவுக்கரசு முதலியார்.

# இலக்கண இலக்கியத் திறவுகோல்

## திருக்குறள்

### முதல் அதிகாரம்

### கடவுள் வாழ்த்து

அகர முதல, எழுத்தெல்லாம், ஆதி
பகவன் முதற்றே, உலகு.

எழுத்து-எல்லாம்-எழுத்துகள் (ஆகிய) எல்லாம்-என விரியும் இருபெயரொட்டுப்பண்புத்தொகைத்தொடர்மொழி.

அகரமுதல-அகரமுதல்-அ; முன்னையது பண்புத்தொகை-விளக்குக, பின்னையது பலவின்பால் குறிப்புவினைவிகுதி; ஆதலால் அகரமுதலவென்பது பண்புத்தொகைக்குறிப்புமுற்று.

உலகு-இங்குசமுதாயவாசகம்-அகிலம்யாவும்.

ஆதிபகவன் முதற்று-ஆதிபகவன்-முதல் - று-விளக்குக; இச்செய்யுளில் முதலிலுள்ளது உபமானவாக்கியம் மற்றது உபமேயவாக்கியம். பின்னையதிலுள்ள உறுப்புக்களுக்கு-முன்னையதிலுறுப்புக்களைத் தனித்தனி பொருத்திக்காட்டி யுபமான சம்பந்தத்தையும் விளக்குக.

மனிதர்பாஷை யமைக்கத்தொடுத்த ஒலிகளுள் அகரமுதல் நாதம் என்பது அனுபவசித்தம்.

இப்படியே-உலகுக்கு-பகவான் காரணனாகவேண்டுமென்பது அனுமானசித்தம்.

எகாரம்-ஈசன் சத்தியமா யுளனென்பதுகாட்டும். (௧)

கற்றதனால், ஆயபயன், என்கொல்; வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

கற்றதனால்-கற்றது அன் ஆல்,
கற்றது-கல்-ற்-அ-து,

கட்டினான்-சமைத்தான் என்றால் முறையே வீட்டை, சோற்றை எனப்பொருள்படல்போலக் கற்றது என்பது என்னசொல்லையாவும்? இப்படிவருஞ்சொல்லுக்கு இசையெச்சமென்றுபெயர்; இன்னுமிப்படி இசையெச்சம் வரும் சில உதாரணங்களைக் காட்டுக.

ஆய ஆகிய, இவ்வாக்கியத்தின் பொருள்என்ன?
என யாவது,

எவன் என்பது என் எனமருவி இன்மைப்பொருளைத் தந்தது

வாலறிவனற்றாடொழாஅர்-இத்தொடர்மொழியிலுள்ள வேற்றுமையையும் பண்பையும், புணர்ச்சி விரித்தோதுக.

கொல் என்பது அர்த்தமின்றிவந்த அசைநிலை.

இச்செய்யுள்வாக்கியத்தின் கர்த்த கர்ம கிரியையுங் கூறுக.
பயனென்என்பது பிரதானவாக்கியம்.

| | |
|---|---|
| பயன் | எழுவாய் |
| என் | பயனிலை |

கற்றதனாலாய-என்பது எழுவாய்க்கு விசேஷணத்தொடர்; (மனிதர்) தொழாரெனின்-என்பது மேலைவாக்கியத்தில் பயனிலையைத் தழுவிவந்த வாக்கியம்.

தொழார்-எனுஞ் செயப்படுபொருள் குன்றாவினைக்கு-தாள்செயப்படுபொருள்.

வால் அறிவன்-நல்-இவ்விரண்டும் தாளுக்கு விசேஷணம்.

பின்னைய வாக்கியத்தைச் சார்புவாக்கியமென்றாவது விசேஷணவாக்கியமென்றாவது கூறலாம்.

இங்கு வாக்கியங்களின் தன்மையைச் சற்று விவரிப்பது அவசியம்.

எழுவாய்-பயனிலை-மாத்திரம் உள்ளவாக்கியம் செயப்படுபொருள் குன்றியவாக்கியம் அல்லது அகர்மகவாக்கியம்.

எழுவாய்-பயனிலை-செயப்படுபொருள்மூன்றுமுள்ளவாக்கியம்செயப்படுபொருள் குன்றாவாக்கியம் அல்லது ஸகர்மகவாக்கியம்; ஒருவாக்கியத்துள்ள எழுவாயையாவது-பயனிலையையாவது செயப்படுபொருளையாவது சார்ந்துவரும்வாக்கியம் சார்பு அல்லது விசேஷணவாக்கியம்.

எழுவாயும் வினையெச்சமுமுள்ள வாக்கியத்தைக் குறையப்பயனிலை வாக்கியம் எனக்கூறலாம் (உ-ம்) சுப்பன்வர ராமன்போனான். (௨)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார்,

இத் தொடர்மொழியிலுள்ள பண்பையும் வேற்றுமையுருபுகளையும் விரித்தோதுக-இவ்வாறே இனிவரும் பாடலிலுள்ள தொடர்களையும் பிரித்தோதுக.

மலர்-என்பது உள்ளத்துக்காதலால் ஆகுபெயர்.

இனியேகுவானை-ஏகினான் என்பதற்கு நியாயமென்ன? (நன்-பொது-சூ-௩௩) நிலமிசை-விண்ணுலகின்கண்.

இச்செய்யுள்வாக்கியம் என்னபிரயோகம்.

பிரயோகமென்பது-கர்த்த-கர்ம கிரியையோடு வாக்கியந்தொடுக்கும் விதம். (௩)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

இக்குறள்வெண்பாவை இரண்டுபிரிவுள்ள தொடர்மொழிகளாக்கி மேற்கூறியவாறேயோதுக.

வேண்டுதல்வேண்டாமையென்னும் இத்தொடர்மொழிக்கு அவாய் நிலைகூறுக.

அவாய்நிலையாவது ஒருசொல் மற்றொருசொல்லைக்
கொள்ளுதற்கு வேண்டி நிற்றல்.

இடும்பை (எ-து) பாபவிசேஷத்தால் நம்மையணுகுந்துன்பம்.

யாண்டும்இல என்பதினால் இம்மையில் கடவுளை நினைந்து மனஞ்சலிப்பின்றி நல்லொழுக்கத்தினிற்பவன் இத்துன்பத்தை மனந்தளர்வின்றிச் சகிப்பானென்பதும், மறுமையில் வீடடைவதால் இத்துன்பம் விட்டகலுமென்பதும் பெற்றாம்.

சேர்தலாவது இடைவிடாது நினைத்தல். (௬)

இருள்சேர் இருவினையுஞ் சேரா; இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

இங்கு இறைவன் புகழ்புரிந்தார் மாட்டு-என்னுந்தொடர்-சேராவென்னும் எதிர்மறைமுற்றுப்பயனிலைக்கு விசேஷணம்.

புரிதல்-இடைவிடாது சொல்லுதல்.

இருவினையும் - என்பதினும்மை வேறுவினையில்லையென்னும் பொருண்முடிபைக் காட்டலால் முற்றும்மை.

நல்வினை-தீவினை-இரண்டினையும் ஈங்கு-இருள்சேர்-என்று அடைகொடுத்தோதினது நல்வினையா லுயர்ந்தபிறப்படைந்து இன்பம் அனுபவித்தலும், தீவினையா லிழிபிறப்படைந்து துன்பம் அனுபவித்தலும், உண்டென்றுகாட்டும் இந்துக்களுண்டய கொள்கையை விளக்கற்பொருட்டு.

இவ்விருவினையும் பிறப்பிற்கேதுவாகலின் அப்பிறப்பைநீக்கி வீடடைய விரும்புவோர்க்கு அவ்விருவினையும் வெறுக்கத்தக்கதாதலின் இருள்சேர் இருவினையென்றார். (௫)

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீரொழுக்க
நெறிநின்றார்; நீடுவாழ்வார்.

ஐந்து-என்ன ?

ஐந்தாசையை அவிக்குங் கடவுளென்னுது பொறிவாயிலென்று விசேஷணங் கொடுத்தெழுதினமையால் - ரூபாகிதனுகி யிருப்பவ

னென்பதும், உயிர்களுக்குள்ள ஐம்பொறிமுதலிய அவையவ உருவங்கள் அவனுக்கு இல்லையென்பதூஉம் - உணர்த்தினார். அவித்தா னென்பது அசம்பாவிதத்தை - சம்பாவிதம்போலக் கூறினார். பொய்தீர்ஒழுக்கம்-பொய்மைதீர்ந்த ஒழுக்கநெறியா வ்து கடவுளின்நிலையையுணர்ந்து அவனளித்த அருளைக் கொண்டு தீவழிவிலக்கிநல்வழிநின்று அவனையேதியானித்தல்.

இதன் தாற்பரியம்-உயிரைப்போல ஐம்பொறிவழியாய் வருமாசை யின்றித் தனது இச்சாசத்தியோடு விளங்குங்கடவுளை நல்லறிவோடுண்மைநெறிப்படிநின்று நினைப்பவர்கள் அழியாவீடடைவார்கள்.

இராமனைப்பற்றிய நாடகம் இராமநாடகம் என்பதுபோல், அவித்தான் ஒழுக்கம், என்பது ஆறும்வேற்றுமைத்தொகையில் வந்தது-தற்கிழமை, பிறிதின்கிழமையின்றி இப்படி வருவதை செய்யுட்கிழமையென்று கூறுப.

உடையவென்னுந் தொக்கியிருக்கிற குறிப்புப் பெயரெச்சத்திற்கு பொறியென்பது செயப்படுபொருள்.

வாயில்-என்பது-ஆகஎன்னும் தொக்கியிருக்கிற வினைக்குறையைக் கொண்டு யிடைப்பிரவரலாய் முடிந்தது.

நீடு-முதனிலைத்தொழிலாகுபெயர், காலங்காட்டி நின்றது. (௬)

தனக்குவமையில்லாதான் றாள்சேர்ந்தார்க்கு; அல்லான்
மனக்கவலை மாற்றலரிது.

இச்செய்யுள்-இரண்டு வாக்கியங்களடங்கிய ஒரு தொடர்வாக்கியம். இதில் பின்வாக்கியத்தில் கொடுத்திருக்கிற பயனிலையைக் கொண்டு அதற்கு எதிர்மறையாக முன்வாக்கியப் பயனிலையையும், இவ்விரண்டு பயனிலைகளுக்கும் நான்காம்வேற்றுமையையும் அமைத்துக்கொள்க. எப்படியென்றால் - தனக்குவமையில்லாதான் றாள்சேர்ந்தார்க்கு மனக்கவலைமாற்றல் (எளிது)

சேராதார்க்கு மனக்கவலைமாற்றல் (அரிது)

அல்லால் என்பது இரண்டு வாக்கியங்களையும் இணைக்கிற எதிர்மறைப்பண்பிடைச்சொல்.

அல்லாமல் என்பது அல்லால் என இடைகுறைந்தது.
அரிது-என்பது இல்லையென்னும் பொருளில்வந்தது.
எளிது-என்பது உண்டென்னும் பொருளில்வந்தது. (எ)

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

இச்செய்யுள்வாக்கியத்தை மேற்கூறிய வாக்கியத்தைப்போல விளக்கிக் காட்டுக.

இங்குபிறவாழியென்றது - பாவக்கடலாதலால் - ஈசுரன் தாளை-அக்கடலைத் தாண்டும் புணையாகக் கொள்ளவேண்டும். ஏனென்றால் ஈசுரன் றருமஸ்வரூபியுந் தயாளுவுமாதலால் தன்னை நினைத்தவர்கள் பாவிகளானாலும் காப்பாரென்பது திண்ணம் அம்-தண்-அன், என்பது அந்தணனென்றாகி அழகிய கிருபையை உடையவனென்று பொருளுண்டாயிற்று. (அ)

கோளில் பொறியிற் குணமிலவே-எண்குணத்தான்
தாளை, வணங்காத்தலை.

கொள்-என்கிற பகுதி தொழிற்பெயராய்க்கோள் எனநின்றது. இதற்குப்பொருள் கொள்கை-கண்முதலிய பொறிகள் பார்வைமுதலிய புலன்களைக்கொள்ளும். ஆதலாலிங்கிருக்கிற இசையெச்சத்தைக் கூறுக.

தலைஎன்பது சினை ஆகுபெயர் இச்செய்யுளின்பொருள் எண்குணங்களையுடைய ஈசுரனை நினையாதவர்கள் பார்வைமுதலிய புலன்களின்றிக் கண்முதலிய உறுப்புக்களிருந்தும் பயனடையாவாறு போல் மக்கள்யாக்கையெடுத்தும் பயன்பெறாது போவார்கள்.
தலையென்பது பால்பகாவஃறிணைப்பெயராதலால் பன்மை வினைகொண்டு முடிந்தது. (கூ)

பிறவிப் பெருங்கட னீந்துவர், நீந்தார்
இறைவனடி சேராதார்.

இச்செய்யுளின்முதல்வாக்கியத்தில் இறைவனடிசேர்ந்தார் என்பதை எழுவாயாக வருவித்துக்கொள்க. இங்கு சேர்ந்தார் என்பது சொல்லெச்சம். (௧௦)

திருவள்ளுவநாயனுர் முறைப்படி கடவுள்வாழ்த்துக்கூற
ஆரம்பித்து முதற்செய்யுளால் கடவுளுண்டென்பதும்,
இரண்டாவதால், கடவுளை வணங்காவிடில் நூல்களையுணர்ந்தும் பயனில்லை என்பதூஉம்.
மூன்ருவதால், அவரை வணங்கினேர் வீடுபெறுவர் என்பதூஉம்,
நான்காவதால், அன்னோரைத் துன்பம் வருத்தாதென்பதூவும்,
ஐந்தாவதால், அவரைப் புகழ்வார்க்குப் பிறவியறுமென்பதூஉம்,
ஆருவதால், அவனருள்வழி நின்ருர்க்கு வீடுண்டென்பதூஉம்,
ஏழாவதால், அவனை வணங்கார்க்குத் துன்பத்தை நீக்க வேறுபாயமில்லையென்பதூஉம்,
எட்டாவதால். அவரை வணங்காதவர்கள் துன்பத்தில்மூழ்கியிருப்பார்களென்பதூஉம்,
ஒன்பதாவதால், அவர்கள் ஆக்கையெடுத்துப் பிரயோசனமில்லையென்பதூஉம்,
பத்தாவதால், அன்னோர்பிறப்பு ஒழியாரென்பதூஉம், விளக்கினுர்.
இவ்வாறே நாயனுர் அருளிய அதிகாரங்களுள் ஒன்ருெடொன்று பொருளிற் ருெடர்ந்திருப்பதன்றி ஒவ்வொரு அதிகாரத்திலுள்ள குறள்களும் சங்கிலித்தொடர்போற் பொருள்களிற் பிறழாது ஒன்றையொன்று தழுவிநிற்கின்றன இவைகளை மாணக்கர்கள் ஆங்காங்கு உய்த்துணர்ந்துகொள்க.

---

## இரண்டாம் அதிகாரம்.

### வான்சிறப்பு.

வானின்று, உலகம்வழங்கி வருதலால்தான் ;
அமிழ்தம், என்றுஉணரல் பாற்று.

அமிழ்தம் புசித்தோர் சாகார்-மழைவிடாதபெய்துநிற்பு உலகு அழியா, ஆதலின்-மழையை அமிழ்தமென்ருர்.

அமிழ்தம்-சாகாமருந்து
வடமொழி (அ-மிருதம்)

நிற்பஎன்பது நின்றெனத் திரிந்தது (நன்-வினையியல்-கு-உஎ). இச் செய்யுளுக்கு தான்-எழுவாய், உணாற்பாற்று-பயனிலை, தான்-என்பதற்கு அம்மழைதானெனப் பொருள்கூறுக.

வானின்றுஎன்பது உலகம் வழங்கிவருதலால் என்னும் வாக்கியத் தின் வினையைத் தழுவியிருக்கின்றது.

உலகம்வழங்கிவருதலாலென்பதும் அமிழ்தமென்றுஎன்பதும், உண ற்பாற்று என்னும் பயனிலையைத் தழுவியிருக்கின்றன; உண ர்பாற்றுஎன்னும் பயனிலையான்து-உணரல் என்னுந்தொழிற் பெயரும்-பாற்று-என்னுங் குறிப்புவினைமுற்றுஞ் சேர்ந்து ஒரு வாக்கியப் பயனிலையாய் நின்றது.

பால்-று-என்பதுபாற்று என்றாயிற்று (நன்-வி-கு-க) இவ்வாக்கியத் தில், வானை மூன்றாம்வேற்றுமையாக்கி நின்றுஎன்பதைஉலகத் தின்மேலேற்றி வழங்கிவருதல் - என்பதற்கு நடந்துவருதல் எனப் பொருள்கூறி விளக்கினும் அமையும், வானினால் உலகம் நிலைபெற்றுத் தொழில்கள் நடந்துவருதல், எனப்பொருள் விரி யும். (க)

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாயதூஉ மழை.

துப்பாய தூஉம்-எழுவாய், மழை-பெயர்ப்பயனிலை.
உம்-எண்ணும்மை.
துப்பாக்கியதும்-துப்பாவதும்-என விரியும்.

இவ்வாறுசிலவாக்கியங்களைத்தொகுத்தும்விரித்தும் எழுதிக்காட்டுக.

தூஉம்என்னுமளபெடை, தேமாவென்னுஞ்சீரின் அசைநிறைக்க வந்தது. (உ)

விண்ணின்றுபொய்ப்பின், விரிநீர், வியன்உலகத்துள்
நின்றுஉடற்றும் பசி

விண்ணின்று-விண்-இன்று-உடற்றும் என்பதற்கு உயிர்செயப்படு பொருளாய்த்தொக்குநிற்கின்றது-உடலல்தன்வினை, உடற்றல் பிறவினை.

பொய்-ப்-இன்.

விரிநீர்-வினைத்தொகை

மழை பொய்க்குமாயின் கடல்நீரால் பயனில்லையென்பதும் ஓரிடமின்றி எல்லாவிடங்களினும் பசிவருத்துமென்பதும் தோன்ற, விரிநீர் வியனுலகமென்றார்.

பசி-என்பதை ரூபகமாக்கிக் கர்த்தத்துவமேற்றிச் சொன்னார். (௩)
(நன்னூல்-பொது-௬-௩அ)

ஏரின் உழாஅர், உழவர்; புயலென்னும்
வாரிவளங் குன்றிக் கால்.

வாரிஎன்பது வருவாய்-முதலாம்வேற்றுமை

வளம்என்கிற பெயரும்-குன்றல்என்கிற வினையுஞ்சேர்ந்து தொடர்வினை, அல்லது வளம்என்பதை ஏழாம்வேற்றுமையாகக்கொள்ளினும் இழுக்கில்லை-வாரியை ஆறும்வேற்றுமைத்தொகையாயும் கொள்ளலாம்; விளக்குக.

குன்றியக்கால் என்கிற வருங்காலத்துவினையெச்சம் இடைக்குறையாய் நின்றது.

ஏரின்என்பதில் மூன்றனுருபு-ஐந்தனுருபாக மயங்கி வந்தது. (௪)

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉம் எல்லாம் மழை.

மழைபெய்யாவிடின் உயிர்வாழ்க்கைகெடும்; பெய்தால் கெட்டவுயிரும் உய்யும் என்பது கருத்து.

கெடுப்பதூஉம், எடுப்பதூஉம்என்கிற இரண்டுவினையாலணையும் பெயர்களும்-ஆகிய என்னும் தொகைநிலைப்பெயரெச்சத்துக்கு முதலாம் வேற்றுமை-மழை-எழுவாய், வல்லது குறிப்புப் பயனிலை;எல்லாம்வல்லதுமழை-எல்லாம்-ஏழாம்வேற்றுமைத்தொகை. இச்செய்யுளில்வந்த அளபெடைகளிரண்டும் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தளைதட்டாது-ஆதலின் இது இன்னிசை நிறைக்கவந்த அளபெடை-குறில்நீண்டளபெடுத்தன,

இரண்டுமென்னுஅ எல்லாமென்றது கெடுக்கும்வழியும் எடுக்கும் வழியும் பலவாதலால்-அல்லது வியப்பாற் கூறினரெனினும் அமையும். மற்றஎன்பது கெடுக்காதென்னும் வினையெச்சத் துக்குப் பதிலாய் வந்தமையால் வினைமாறறிடைச்சொல்.

ஆங்குஎன்பது மேல்கெடுத்த விரைவுபோலவேயென்று பொருள் படுதலால், உவமை இடைச்சொல்.

ஏகாரம் என்ன ? (ரு)

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

இச்செய்யுளின் தொடர்வாக்கியத்தைமுதல் அதிகாரத்தின் ஏழாவது பாடலிற் காட்டியதுபோலப் பிரித்தெழுதுக.

மற்று, வினைமாற்றிடைச்சொல் எப்படி?
ஆங்கு, என்பது விரைவுபற்றிவந்த இடைச்சொல்.
அரிது, என்பதைக்கொண்டு முடியும்.

ஏ-என்ன ?

மழைபெய்யாவிடின் புல்லும் இல்லையென்பது இதன்கருத்து. விசும்புஎன்பது-ஆகாயத்திலுள்ள மேகத்துக்காயதால்என்ன ஆகு பெயர் ?

தலையும்-என்பதினும்மை 'விகாரத்தாற்றொக்கது, என்ன உம்மை ? காண்பு-அரிது. (சு)

நெடுங் கடலுந் தன்னீர்மை குன்றுந்
தடிந்தெழிலிதான் நல்கா தாகி விடின்

தடிந்து குறையச்செய்து-முன்வினை-பிறவினையாகி வந்தது. தான்என்பது யிடைச்சொல்.

கடலும்என்பதில் தண்ணீரியல்பே குன்றினல் பூமியென்படாதென் பது கருத்து உ-ம். என்ன ?

கடலின்இயல்பு குறைதலாவது மீன்முதலிய உயிர்களும் முத்துமுத லிய பதார்த்தங்களும் உண்டாகாமை.

இச்செய்யுளால்-மழைக்குக் காரணமாகுங் கடலே துன்பமடையுமாயின், அம்மழையால் நிலத்திருக்கும் உலகுஎன்பட்டாது என்பது பொருள். (எ)

சிறப்பொடு பூசனை செல்லாது, வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

திவியில்-வசித்தலால் தேவர்களென்று அவ்விடத்தி லுள்ளவர்களுக்குப் பெயரேயொழிய அவர்களைக் கடவுளென்று கொள்ளத் தக்கதன்று. பூவுலகத்தாருக்கு வானுலகத்தார் சிரேஷ்டரென்று சகல மதஸ்தர்களும் ஒப்புக்கொண்டிருத்தலால்-இங்கு பெரியோர்களுக்கு யாம் செய்யும்வண்ணம் வானோர்க்குஞ் செய்யத் தக்க கடமை யுண்டென்பது இந்தமதம். ஆதலால், இச்செய்யுளுக்குப் பொருள், மழைபெய்யாவிடின் இப்பூமியின்கண் வானோர்க்கும் நித்திய, நைமித்தியங்களும் நடவா. பூசை தினந்தோறும் நடப்பது அவசியமாதலானும், சிறப்புப்பொருளிருந்தாற் செய்யத்தக்கதாதலானும் பின்னையதை ஒடுக்கொடுத்து அப்பிரதானமாக்கினார். அதாவது பெரியோர் வந்தால் உபசரிப்பது யார்க்கும் அவசியமானகடமை - அவர்கள் கோரியதைக் கொடுப்பது ஆக்கமுள்ளோர்க்கே சாத்தியம். (அ)

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

உலகம்-ஏழாம்வேற்றுமைத்தொகை.

வழங்காதெனின்எனும் வினைக்கு மழை தொகைநிலைச்செயப்படுபொருள்.

தானம்-இல்லறம், தவம்-துறவறம்.

தானம்-மனிதன் செய்யவேண்டும் கடமைகள்.

தவம்-அவன் அனுஷ்டிக்கவேண்டிய நன்னெறி. (கூ)

நீரின் றமையா துலகெனின் ; யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

உலகு ஆகுபெயர் உலகியல்பு.

ஏவ்வகைமேம்பாட்டர்க்கும்-உலகவாழ்க்கைக்கு-நீர் அவசியம்.

அப்படியே-ஆறு கிணறு சுனை முதலிய நீரொழுக்கிற்கெல்லாம் மழைஅவ்வசியம் - ஆகவேமழையின்றி நீர்ஊரு, நீரின்றி உலகு உய்யா-என்பதுபொருள். (௧௰)

இவ்வதிகாரத்தினுள்ள செய்யுட்களின் பொருளின் தொடரை முன் அதிகாரத்திற் கூறியபடி விரித்துக்காட்டுக.

---

# மூன்றாம் அதிகாரம்.

## நீத்தார்பெருமை.

இங்கு, நீத்தாரென்பது உலகியலையும்-இல்லறவாழ்க்கையினது நிலையாமையையும் உணர்ந்து கடவுளின் தன்மையைத் தெரிந்து பற்றுக்களைவிட்டு வீடடைய முயல்வோரை.

இப்படி நீத்தார் முத்திமார்க்கததிற்குரிய வழிகளைத் தேடித் தங்கள் சுகத்தைப் பார்ப்பதுமன்றிச் சீவகாருணியத்தோடு பிறர்க்கு வழிகாட்டவும், இல்லறத் தமைந்தோ நல்லொழுக்கத்தினிற்கவும், அவர்கள் செய்யவேண்டிய கடமைகள் முதலியவற்றை விவரித்துப் பலநூல்களியற்றுவது இத்தேசத்தன்றி பிறதேசங்களிலும் தொன்றுதொட்டவழக்கம். ஆதலால், இன்னோர்பெருமை வான்சிறப்பின் பின்னால் வைக்கப்பட்டது. இதற்கு மேற்கோள்-நாலடியார் "பெயற்பான்மழைபெய்யாக் கண்ணுமுலகஞ்-செயற்பால செய்யா விடினு-என்னை யுலகுய்யுமாறு."

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

வேண்டும்என்பது குறிப்புவினைமுற்று.
துணிவுஎன்கிற எழுவாய்க்குப் பயனிலை.
பெருமை செயப்படுபொருள்.

ஒழுக்கத்து நீத்தார்என்பது நல்லொழுக்கத்தினின்று தீவழி ஒழித்தவர்கள் விழுப்பத்து-சிறந்தபொருள்களுள். (விழுப்பம்-அத்து) நூல்கள்சொல்லும் பெருமையான பொருள்களுள் ஒழுக்கத்து நீத்தார் பெருமை சிறந்தது. (௧)

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக் கொண்டற்று.

துறந்தார்-எதனை ?
பெருமை-நான்காம்வேற்றுமைத்தொகை.
துணை-இரண்டாம்வேற்றுமைத்தொகை ;
கூறும், என்னும்வினைக்குச் செயப்படுபொருள்,
அல்லது பெருமையைத் துணையினாற் கூறினென வைத்து இரண்டுமூன்றுமா யிணைக்கினு மிழுக்காது.
இச்செய்யுளுக்கு யாம் தோன்றுவெழுவாய்.
கொண்டால்என்பது கொண்டெனத் திரிந்துநின்றது.
அல்லது கொண்ட-அற்று-கொண்டற்று.
அற்று-குறிப்புவினைமுற்று, அன்னது.
அற்று-அன்ன-று-அன்-று அற்று என்றாயிற்று.
துணைக்கூறலும், இறந்தாரை யெண்ணலும் கூடாதென்பது கருத்து. (உ)

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

இங்கு-இருமைஎன்பதில் மை விகுதி பகுதிப்பொருளையே காட்டும் அதின் றன்மையன்று.

இவ்வாறே ஒருமை, மும்மை, எழுமைமுதலியன.
இருமை-ஆறாம்வேற்றுமைத்தொகை.
இதற்கு-அவாய்நிலை-பிறப்பு-வீடு-அல்லதுநன்மை-தீமை,
அறம்பூண்டார்-நல்லொழுக்கத்தை யாபரணமாகக் கொண்டவர்கள். உலகு-ஏழாம்வேற்றுமைத்தொகை.
பெருமை-என்பதில் பிரிநிலை ஏகாரந்தொக்கியிருக்கின்றது.
அறம்பூண்டார்பெருமையேயொழிய அதிகாரஞ்செலுத்தினார் பெருமை, பிறங்கிற்றிலவென்பது கருத்து. (௩)

உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

நீஎன்னைக்காஎன்பதில் எனக்கு ஆபத்துவராமல்கா என்று பொருள். நீ-உன் நாயைக்கா-என்பதில், அந்நாய் பிறருக்கு ஆபத்து விளைக்காமல்-கா-என்பது பொருள் - இச்செய்யுளில்-கா-என்பது பின்னைய அர்த்தத்தில் வந்திருக்கிறது. இப்படி பலவுதாரணங்களை யெழுதிக்காட்டுக.

ஐந்தும் என்பது ஐம்புலன்.

வரன்என்னும்-வைப்பு-சிறந்ததென்கிறபூமி.

அதாவது மோக்ஷபூமி.

உரம்என்பது உரன்என்றாயிற்று.

இவ்வாறுள்ள போலிகளைக் கூறுக.

உரன்-தோட்டியானால்-யானைகளெவை ? யானைப்பாகன்யார் ? மோக்ஷமாகிய வயலுக்கு - இவன் வித்தாகி முளைத்துச் செழிப்பானென்பது கருத்து. (௪)

ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

அகலிகையின்பொருட்டு இந்திரனுக்குக்கௌதமரால் நேரிட்டசாபம் யாருக்குந் தெரிந்த கதை.

ஐந்து-என்பதில் முற்றும்மை தொக்கியிருக்கின்றது.

ஆற்றல்-என்பது நாலாம்வேற்றுமைத்தொகை.

ஏகாரத்தால் வேறுகூறுவது அவசியமில்லையென்பது விளங்கும். (௫)

செயற்கரிய செய்வார் பெரியர் ; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

செய்கலாதார்என்பதில் செய்க-வினையெச்சம். அகலாதார் எதிர்மறைமுற்று முதற்சொல்லின்கடை தொக்கிப்புணர்ந்தது.

செய்யத் திராணி யில்லாதார்-என்னும்பொருள்படவந்தது.

இருவழியிலும் செயற்கரியவென்பது வினையாலணையும்பெயர்.

இரண்டாம்வேற்றுமைத்தொகை.

இசசெய்யுளை - கீழ்வருஞ் செய்யுளுடனே பொருளொட்டிக் காண்க.

" பிறப்பொக்கு மெல்லாவுயிர்க்கும் ; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்." (சு)

சுவையொளியூ றோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு

இங்கு-ஐந்தின்வகையென்பது ஒவ்வொரு புலனுக்குமுரிய தன்மாத்திரையென்னுந் தத்துவங்கள்.

இவைகள்-உ0-என்றும் உகு என்றும் பலவாறாகச்சொல்லுவார்கள்.

இதுநிற்க, உலகத்திற்கேற்றபடி ஐந்தின்வகைதெரிதலாவது ஐம்புலன்களை யின்னின்னவிடத்தில் செலுத்தல்கூடும்,இன்னின்ன விடத்தில் கூடாதென்று உய்த்துணருந்தேர்ச்சி. கட்டே-கண்ணது, கண்-டு-எனநின்று கட்டு என்றாயிற்று-இஃது விளக்குக. (நன்-வினை-கூ. க)

ஏ-என்ன ?

இத்தகையஞானிகள்சொற்படிஉலகத்தார் நடப்பாரென்பது கருத்து.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

செயற்கரிய செய்வார் பெரியரென்பதற்கேற்க நிறைமொழி மாந்தரென்றார்.

நிறைமொழிஎன்பது பழுதுபடாமொழி.

மறைமொழி-வேதமொழியென்றும் மந்திரமென்றும் கூறலாம்.

இதுநிற்க உலகத்திற்கேற்றபடி இச்செய்யுளுக்குப் பொருள். பழுதுபடா மொழியையுடைய பெரியோர்கள் பெருமையை அவர்கள் இயற்றிவிட்ட நீதிநூல்களே தாமாய்க்காட்டும்.

இவ்வாறே நாயனார் குறள் ஒவ்வொன்றும், ஒவ்வொரு ஆசிரமத்தைப் பற்றிச் சிறப்பாய்ச்சொன்னதாயினும், அதுவே பொதுப்பட உலகநீதி விளக்கவும் உபயோகப்படும். இதுவே இந்நூலின் பெருஞ்சிறப்பு. மொழிமாந்தர் என்பது உருபும் பயனுமுடன் றொக்கிய இரண்டாம்வேற்றுமைத்தொகை ; விளக்குக.

காட்டிவிடும்என்பதில் விடும்என்பது துணிவுவினை.
இதுவேறுவினையோ டொட்டிவருமேயன்றித்தனித்துவாராது.
விடுஎன்கிற முதல்வினை இதன்று.
நிலம்-அத்து-நிலத்துஎன்பதற்கு (நன்-மெய்-கு-கச)
அத்துச்சாரியை ஒன்றுதான் தனித்து ஏழாம்வேற்றுமைப்பொருளைத் தரும். (அ)

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

உரனென்னுந்தோட்டியால் புலன்களை யடக்கியதனால் வந்த வீரத் தன்மையோடு நற்குணங்களை மேற்கொண்டாராதலான் அக் குணங்களைக் குன்றென்றார்.
குணம்-சாதியொருமை.
கணமேயும்என்பதால் அவர்பால் பிழைசெய்யினும் பெரும்பாலும் வெகுளாரென்பது பொருள்.
ஆதலால்-உம்-என்ன உம்மை ?
காத்தலரிதுஎன்பது அவர்கள் சாபத்தைச் சகித்தல் கூடாது.
அவர்களுக்கு வெகுளி உண்டாகுங்கால் அவர்கட்டே உலகும் ;
ஆதலின் அவர்கள் வாளாவிருக்கினும் அக்கணமே தப்பிதஞ் செய் தோரை உலகத்தார் சும்மாவிடார் என்பது கருத்து.
மேலும் அவ்வாறுபிழைசெய்தோர்க்கு நீத்தாராலும் உலகத்தாராலும் தீங்குநேரிடாவிடினும் கடவுள்கோபத்திற்கும் நிரையத்துக்குந் தப்பார். மேற்கோள் நாலடியார்—"தம்மையிகழ்ந்தமை" என் னும் பாட்டிற்காண்க. (கூ)

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

மற்று அசைநிலை.
செந்தண்மை-காருணியம்
பூண்டொழுகல்-விரதமாகக்கொண்டு நடத்தல்.
இச்செய்யுளுக்கு எழுவாய், பயனிலைகூறி
இன்னது எழுவா யென்பதற்கு ஞாயஞ்சொல்லுக. (கய)

# நான்காம் அதிகாரம்.

## அறன்வலியுறுத்தல்.

சிறப்பீனுஞ் செல்வமு மீனும் ; அறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

சிறப்பு-வீடு,
செல்வம்-துறக்கமுதலியன;
அல்லது சிறப்பு-பெருமை-புகழ்;
செல்வம்-போகம்.

முதல்வாக்கியத்துக்கு அறம் தோன்றாஎழுவாய்.

அல்லது ஈனும்என்பதைப் பெயரெச்சமாகக்கொண்டு ஒரு வாக்கியமாக முடிப்பினும் இழுக்காது.

ஊங்குஎன்பது குறிப்புப்பெயரெச்சம், அல்லது உயர்விழிவு எல்லைப்பொருளில் வந்த இடைச்சொல்.

ஆக்கம்என்பது ஆக்கத்தைத் தரும் வருவாய்.

ஆதலால் என்ன ஆகுபெயர் ?

ஓ என்பது வேறொரு வழியுமில்லை யென்பதைக் காட்டும்.

ஆதலால் ஓகாரம் என்ன ?

எவன் வினாகுறிப்புப்பயனின்மை. (க)

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூஉங்கில்லை கேடு.

வேறொன்றை விதிக்க அறத்தின்-ஊங்கு என்று மீண்டும் எடுத்தார்.

மழைபெய்யப் பயிர்செழிக்கும்,
பயிர்செழிக்கத் தானியம்விளையும்,

தானியம்விளைய,உலகம் உய்யும் என்பதுபோல். இவ்வாறு பின்னும் சிலவாக்கியங்களை யெழுதிக்காட்டுக.

அறத்தின்என்னும் ஐந்தாம்வேற்றுமை ஆக்கம் என்னும் பெயரைக் கொண்டது. (உ)

ஒல்லும் வகையால் அறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்.

ஓவாதுஎன்னும் எதிர்மறைவினையெச்சம் செயல்என்னும் வியங் கோள்வினைமுற்றைக்கொண்டு முடிந்தது.

ஒருவன் தோன்றாவெழுவாய்.

"இயலுந்திறமாவது-இல்லறம் பொருளளவிற்கேற்பவும், துறவறம் யாக்கைநிலைக்கேற்பவுஞ் செய்தல்.

ஓவாமை-இடைவிடாமை.

எய்தும்இடமாவன-மனம் வாக்குக் காயங்கள்.

அவற்றாற் செய்யும் அறங்களாவன-முறையேநற்சிந்தையும், நற் சொல்லும், நற்செயலுமென விவை."

மனத்துக்கண் மாசில னாதல்; அனைத்தறன்?
ஆகுல நீர பிற.

ஆதல்-வியங்கோள்முற்று.
அனைத்து-குறிப்பு முற்று.

அ-சுட்டு, தனை-அளவிடச்சொல், அத்தனை-அனை; பிறகு து-விகுதி பெற்று அனைத்து என்று ஆயிற்று.

நீர-குறிப்புமுற்று; ஆகுலம் - வெளியிடம்பம், ஆறாம்வேற்றுமைத் தொகை; முதல்வாக்கியத்திற்கு-ஒருவன்-தோன்றாவெழுவாய். பிற-மனத்தொழிலொழிந்த சொல்லும்செயலும் இடையடியாக வந்த பெயர்ச்சொல். (௪)

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

இழுக்கா-பகுதி-இழு, ஆ-எதிர்மறை, கு-சாரியை.
இயன்றது-செய்வினை-செயப்பாட்டுவினையாய் வந்திருக்கிறது; பொருள், செய்யப்பட்டது.

இயன்றது-எழுவாய்; அறம் பயனிலை.

அறஞ்செய்யுங்கால் இந்நான்கு துர்க்குணங்களும் இருக்கலாகாவென் பது தோற்றப்பிரிநிலை-ஏகாரம் தொக்கிநிற்கின்றது, காட்டுக.

அன்றறிவா மென்னா தறஞ்செய்க; மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

அன்று-உயிர்போகும்-ஆபத்துவந்தவன்று.
பொன்றுங்கால்-இறக்குங்கால்.
பொன்றாத்துணை - உடலோடழியாது உயிருக்குச் சுக மளிக்க வருந்துணை. மற்று என்ன ? (௬)

அறத்தா றிதுவென வேண்டா ; சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

முதல் வாக்கியத்திற்கு யாம் தோன்றாவெழுவாய்.
இரண்டாம்வாக்கியத்தின் கடையில்-காண்க-என்பதைக் கூட்டி வேண்டு மெழுவாயுட னிணைத்துக்கொள்க. அல்லது என என் பதைத் தொழிற்பெயராக்கி வேண்டாமெனும் பயனிலையுடன் முடிக்க.

இங்கு-ஆறு, தர்மத்தாலுண்டாகும் பயன்; அப்பயன் சென்மந்தோ றும் தொடருமென்பது தோன்ற ஆறென்றார். (௭)

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

படாஅமை-அளபெடை யெதற்கு வந்தது;
அஃதொருவன்-என்பது நன்றாற்றின் என்னுங் காய்ச்சீரை அடுத்து வந்தபடியால் இங்குஇடைநின்ற ஆய்தத்தை ஒற்றாகக் கொண்டு இச்சீரை கூவிளங்காய் வாய்ப்பாட்டுடன் ஒட்டுக.
இப்படி ஆய்தம் ஒற்றாய் வருகிற சிலவுதாரணங்களைக் காட்டுக.
உயிராய் வரும் உதாரணங்களையுங் காட்டுக.

வீழ்நாள்-நல்லறஞ் செய்யாது கழிந்த நாள்.
படாமை-எதிர்மறைவினையெச்சம்.
அஃது-அங்ஙனமாற்றல் எழுவாய், கல்-பயனிலை.
வாழ்நாள்வழி-சென்மமெடுக்கும்வழி. (௮)

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்,
புறத்த புகழு மில.

அறத்தான் உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது
ஏ-வேறு இன்பம் இன்பமல்ல, துன்பம் என்பதைக் காட்டும்;
என்ன ஏகாரம் ?

புறத்த-இடையடியாய் வந்த குறிப்புவினைமுற்று.
மற்று-அறம்ஒழித்த வென்பதைக் காட்டும்; ஆதலால் என்ன பொருள்?

புகழும் இல்லையென்பதால், அறவழியில் செய்பவனுக்குத் துன்பம் விளக்கினும் புகழுண்டாக்கத்தக்க வினையுண்டென்பது கருத்து. இங்கு அப்புகழும் வராது. (௯)

செயற்பால தோரு மறனே, ஒருவற்கு
உயற்பால தோரும் பழி.

செயற்பாலது-செய்யத்தக்கது.
ஒரும்-இருவழியும் அசைநிலை.
பழி-தீவினைபிறரால் பழிக்கப்படுதலால் பழியென்றும், அல்லது பிறர்க்குப்பழியை விளைத்தலால் பழியென்றுங் கூறப்பட்டது.

உயற்பாலது-நீக்கத்தக்கது.

ஒருவன்-குருவற்கு, வல்லினம் நின்றவிடத்து இடையினம் நின்றால் புணர்ச்சியென்ன பொருளைத்தரும்? (௧0)

---

# ஐந்தாம் அதிகாரம்.

## இல்லறவியல்பு.

"இல்லறமல்லது நல்லறம்அன்று" என்று ஔவை சொல்லியபடி இரண்டறத்துள், தலைமையானது இல்லறமாதலால் அதனை முற்கூறி இல்வாழ்க்கை இத்தன்மைத்தென்று விளக்குகின்றார்.

இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

இயல்புடைய மூவர் என்பதனுல் பிரமசரிய விரதத்திலிருந்து பிறகு இல்வாழ்க்கையை நன்றாய்நடத்த வித்தியாப்பியாசஞ் செய்பவனும் இல்வாழ்க்கை; நிலையிலிருந்து தான் செய்யத்தக்க கடமைக

ளெல்லாஞ்செய்து, அப்பால் இல்வாழ்க்கைச்சுகம் போது மெனத்திருப்தியடைந்து,மனைவியோடு தனித்து நாட்கழிக்கும் வானப்பிரஸ்தனும்; இதற்குமேல் மெய்யுணர்ந்து தனித்தொழியும் சன்னியாசியும் ஆகிய மூவருமாம்.

இப்பாகுபாட்டால் பூர்வத்தில் நம்முடைய தேசத்தில் அதிபாலியத்தில் ஆடவர் மணம்புரிந்து குடும்பப் பாதுகாக்கும் வழியின்றித் துன்பப்படுங் கொடியவழக்கமில்லை யென்பது திண்ணம்.

என்பான்-என்றுசொல்லப்படுவான்.

இல்என்பது இல்லறத்திலிருந்து செய்யப்படும் அறத்திற்காயிற்று.

ஆதலால் என்ன ஆகுபெயர் ?

நல்லாற்றின்-நின்றதுணை, மேத்தார் இயற்றிய நீதிவொழுக்கத்தினின்று ஏனையோர்க்குச் சகாயஞ் செய்யத்தக்க துணை. (க)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் றுணை.

துறந்தார்-காக்க உரியவராற் றள்ளுண்டவர்.

துவ்வாதவர்-உணவின்றி வருந்துமவர்.

இறந்தார்-அனுதையாய் வந்திறந்தவர். (உ)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

தென்புலத்தார்-பிதிர் தேவதைகள்.

தெய்வம்-ஏனைய வானோர்கள்.

விருந்து-புதியரும் பழகினவருமாக வந்தவர்கள்.

ஒக்கல்-சுற்றத்தார்.

தான்-இல்வாழ்வான்.

ஐம்புலத்து-ஆறு-இவ்வைந்திடங்களினுஞ் செய்யும்வழி.

ஆறு-செயப்படுபொருள், ஓம்பல்-எழுவாய்.

இதில் தென்புலத்தார்முதல் தானீறாக ஒன்றுக்கொன்று சிறந்ததாகக் கொள்க.

ஆங்கு-அசை. (ங)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

பழி-இரண்டாம் வேற்றுமை, உலக வழக்கப்படி நான்காம் வேற்றுமை.

பாத்து-பகுத்துஎன்பது இடைகுறைந்து முதல் நீண்டுவந்த வினையெச்சம்; அல்லது பா பகுதியென்று கொள்க.

ஈட்டியென்னுஞ் சொல்லை அஞ்சியென்னும் சொல் அவாவுகின்றது.

ஊண்-உண்ணல் தொழிற்பெயர்.

வாழ்க்கை-முதல்வேற்றுமை.

உடைத்தாயின்என்பது உடைமைஎன்னும் பண்படியாகவந்த குறிப்பெச்சம்.

வழி எஞ்சல்-சந்ததி குறைதல்.

இல்என்பது-எதிர்மறைப் பண்படியாய் வந்த குறிப்புவினை முற்று.

இது தனித்தேனும் அகர ஐகாரச் சாரியைப் புணர்ந்தேனும் ஐம்பாலுக்கும் மூவிடங்களுக்கும் பொதுவாய்வரும். (ச)

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

அன்பும்-அறனும்-எத்தனும்வேற்றுமை ?

முதலிலுள்ள குறைவாக்கியத்துக்கு இல்வாழ்க்கை எழுவாய்.

அன்பு மனைவிபால் வைக்க, பண்புண்டாகும்.

அறஞ்செய்யப் பயனுண்டாகும்.

அது என்பது அவ்வாறுடைத்தாயிருத்தல்.

இச்செய்யுளால் நம்முன்னோர் ஸ்திரீகளை மதித்தே நடத்தினர் என்பது விளக்கம். (ரு)

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

மேற்கூறிய செய்யுட்களினின்று இல்லறத்து ஆறு இன்னதென்று விளக்குக.

புறத்தாறு யாது?

எவன் என்பதனால் போய்ப் பயனில்லையென்பதும் அப்பயனும் இங்கே யெய்தும் என்பதூஉம்பெறும்.

போஒய்-அளபெடையின் பயன் கூறுக. (கூ)

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

இயல்பினால்-இல்லற ஒழுக்கத்தோடு.
இல்வாழ்க்கை-ஏழாம்வேற்றுமைத் தொகை.
வாழ்பவன் என்பான் இருபெயர் ஒருதொடர்.

முயல்வாரெல்லாருள்ளும் என்பது முயல்வாருள் எல்லாமென மருவியது-ஏழாம்வேற்றுமை கூட்டிப்பிரித்தற் பொருளில் வந்தது.

தலை என்ன ஆகுபெயர்?
முன்செய்யுளையும் இதனோடு ஒட்டிக் கருத்துணர்க. (எ)

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

ஒழுக்கி-ஒழுகச்செய்து
யாரை எவ்வாறு
நோற்பார்-தவஞ் செய்வார்.

நோற்பார்என்பது தவஞ்செய்வார் நிலைமையை ஆதலால்;
இதுஎன்ன ஆகுபெயர்?
நோற்பார்-தன்னையை மட்டும் பொறுப்பார்;
இல்வாழ்வார்-பிறர் நோயையும் பொறுப்பார்;
அதாவது தன்னையைப் பொறுத்துப் பிறர்நோயையுந் தீர்ப்பார்.

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

ஏகாரத்தை வாழ்க்கை மேலேற்றுக.
அஃதும் துறவறமும்
நன்று-ஒருவாறு நன்றாகும்.
இதற்கு வேறுவிதமாயும் பொருள் கூறலாம்.
இல்வாழ்க்கையே அறத்திற் சிறந்தது.
இதனை அறத்தோடு செய்து உலகம் ஒப்ப நடாத்தின் மிகச் சிறந்ததாகும்.
அல்லது அயலாரைப் பழியாது நடாத்தின் சிறந்ததாகும்.
ஏகாரம் என்ன? (கூ)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

வாழ்பவன்-எழுவாய்.
வைக்கப்படும்-பயனிலை.
படும்-தகும்.
வாழ்வாங்கு இல்வாழ்க்கை யியல்பினால்
இப்படி வாழ்பவன் நற்கெதிபெறுவான், அல்லது இவ்வுலகின் கண், தேவரைப்போலக் கொண்டாடப் படுவானென்பது பொருள்.

---

# ஆறும் அதிகாரம்.

## வாழ்க்கைத்துணைநலம்.

வாழ்க்கைக்குத்துணையாகிய மனையாளது நலம் எனவிரியும்.

மனைத்தக்க மாண்புடையளாகித்தற் கொண்டான்,
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

மனைத்தக்க-மனைக்குத்தக்க.
வளத்தக்காள்-வளத்துக்குத் தக்காள்.
தக்காள்-எழுவாய்; துணை-பயனிலை.
இச்செய்யுளால் பழியஞ்சிப் பொருளீட்டல் கணவன்பாலும், அப்பொருளை யளவறிந்து மனைக்குவேண்டுவன செய்தல் மனைவியின்பாலுமென விளங்கும்.

இப்பின்னையதொழிலை நம்முந்திய அன்னைமார் கல்வியும் அறிவு மின்றி நடாத்தி யிருப்பார்களோ வென்பது யோசிக்கத்தக்க விஷயம்.

இதனால் பெண்பால்களுக்கும் கல்வி அவசியம் வேண்டுமென்ப தாயிற்று. (௧)

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.

மனை-நான்காம்வேற்றுமை யுருபும்பயனு முடன்றொக்கதொகை.

எனைமாட்சித்தாயினும்-எவ்வளவு செல்வப்பெருமையுடையதாயினும்.

வாழ்க்கை-மனைவாழ்க்கை.

இல்-பயனில்லை. (௨)

இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதென்
இல்லவண் மாணாக் கடை.

கடையென்பது இடப்பெயர்,

ஏழாம்வேற்றுமைத்தொகை.

மாணா என்பது கடைகுறைந்த எதிர்மறைப்பெயரெச்சம்.

இல்லவள் என்பதில் ளகரம், ணகரம் ஆவானேன்? (௩)

பெண்ணிற் பெருந்தக்க யாவுள? கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

பெருந்தக்க வினையாலணையும்பெயர் எழுவாய்.

திண்மை-உறுதி,

கற்பு-புருஷன் இட்ட கட்டளைப்படி நடத்தல்.

கல்ப்பம் என்னும் ஆரியமொழிச்சிதைவு கற்பென்றாயிற்று.

கல்-என்னும் பகுதியில் வந்த கற்புஎன்னும் மொழிக்குப் பொருள் யாது? (௪)

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

தெய்வந் தொழாஅள்-முந்தித் தெய்வந் தொழாஅள்
தொழுநற் றொழுது-முந்திக் கொழுநனையே தொழுது
எழுவாள்-இல்லறக் கருமத்திற் புகுவாள்.

தொழாஅள் என்பதை எதிர்மறைவினையெச்சமாகக் கொள்ளினும் அமையும்.

இது கற்புநலத்தைச் சிறப்பித்துக் காட்டிய அதிசயயுக்தி. (௫)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

செய்துஎனெச்ச மூன்றனையும் செயவென் னெச்சமாகக்கொண்டு பொருள்கூறுக.

இப்படி ஒரு வினையெச்சத்தை மற்றொரு வினையெச்சமாக மாற்றிப் பொருள்கூறுதற்கு மேற்செய்யுட்களி லுதாரணங் காட்டுக.

செவ்வெண்ணும்மை செய்யுள் விகாரத்தாற்றொக்கது.

இம்முத்தொழிலிலும் ஒன்றிலாவது குறைவில்லாதவளே நிறைந்த கற்புடைய பெண். (௬)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

சிறை-நிறை மூன்றும் வேற்றுமைத்தொகை;
மகளிர்-இரண்டாம் வேற்றுமைத்தொகை.

அல்லது சிறைநிறை இரண்டையும் முதல்வேற்றுமையாக்கி, மகளிரை இரண்டாம் வேற்றுமையாக்கிப் பொருள்கூறினுமமையும்.

இச்செய்யுளால் மேற்செய்யுளிற் கூறியதற்காக்குங் கடமை கூறப்பட்டது. (௭)

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

பெண்டிர்-பெற்றாற்-பெறின்-பெண்கள் தங்களைக் கொண்டானைப் பேணப்பெறின்.

புத்தேளிர் வாழுமுலகு பெருஞ்சிறப்புப் பெறுவர்-மறுமையில் பெருமையை அடைவார்.

பேண என்பது சொல்லெச்சம்.

இதனால் தற்கொண்டானைப் பேணுதலாகிய இரண்டாந்தொழில் கூறப்பட்டது.

உலகு-வழாம் வேற்றுமைத்தொகை. (அ)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

புரிந்த என்னும் பெயரொச்சம் வினையெச்சமாகத் திரிந்தது; அல்லது-புரிந்த-இல்-தொகுத்தல் விகாரத்தாற் புணர்ந்தது. இதனால் தகைசான்ற சொற்காக்குந் தொழில் கூறப்பட்டது.

கணவனது தீச்செயல்களையும் மனைவியினது புகழ்மறைக்குமென்பார்-ஏறுபோற் பீடுநடை யென்றார்.

இல்-மனைவி இரண்டாம் வேற்றுமைத்தொகை. (கூ)

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.

மேற்கண்ட-முத்தொழில்களையுடைய மனைவியின் குணத்தை ஆன்றோர் மங்கலமென்பார்கள்.

அத்தகைய மனைவி-நன்மக்களையு மீன்றால்-அம்மக்கட்பேற்றை அம்மங்கலத்திற்கோர் நன்கலம் என்பார்கள்.

ஆன்றோர்-தோன்றாவெழுவாய்.

மாட்சி-பேறு-இரண்டாம் வேற்றுமைத்தொகை.

மங்கலம் என்ப, நன்கலம் என்ப இவ்விரண்டும் தொடர்வினைப்பலர்பால்முற்று. (ய)

# ஏழாம் அதிகாரம்.

## புதல்வரைப்பெறுதல்.

---

இவ்வதிகார விஷயத்தை முன்னதிகாரத்தில் (நன்கலம்-நன்மக்கட் பேறு) என்று குறித்துக்காட்டினர்.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை, அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

பிறவென்பது-பிறபேறுகளை, யாமறிவதில்லை-யாம் மதிப்பதில்லை.
அறிவறிந்த மக்கள்-ஞானமறிந்த மக்கள்.
அறிவு, மக்கள் இரண்டும் என்னவேற்றுமை?
எல்லாப்பேற்றிலும் அறிவுடைய மக்கட்பேறு உயர்ந்ததென்பது கருத்து. (க)

எழுபிறப்புந் தீயவை தீண்டா, பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

எழுபிறப்பும்-முன்னேழு பின்னேழு வமிசத்திற்கும்.
நற்புத்திரனாற் கதிவருமென்பது இந்துமதக்கொள்கை.
எழுப்பிறப்பென்பதை ஈரேழு மூவேழு என முன்னும்பின்னுமாய் அர்த்தங்கொள்ளினும் அமையும். இச்சற்புத்திரனுடைய மூதாக்கள் பாபத்தினால் நரக மமிழ்ந்திருக்கினும் இவன் நற்செய்கையால் வீடுபெறுவாரென்பதும், இவனுக்குப் பின்வருஞ் சந்ததிகள் நற்செய்கையில் வழுவார்களாதலால் நரகே யடையார்களென்பதூஉம் பெற்றாம்.
இனி எழுபிறப்புமென்பதனை இந்நற்புத்திரன் நடக்கையின்வலியால் இவனுக்குப் பின்வரும் எழுதலை முறையாரும் ஒழுக்கத்தில் வழாரென்று உலகஅனுபவத்தாற் பொருள்கூறினும் அமையும்.
பின்வரும் தக்கார் தகைவிலார் (செ. ககச.) என்னுங் குறளினுலுங் காண்க.

இச்செய்யுளால் அறிவறிந்த மக்கட்பேற்றின் பயன் கூறினர். (உ)

தம்பொரு ளென்பதம் மக்கள்; அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்.

தம்மக்கள்-இரண்டாம் வேற்றுமைத்தொகை.

அறிந்தோர்-தோன்ரு வெழுவாய்.

அறிந்தோர் தம்மக்களை தங்கள் சொந்தப் பொருளென்பார்கள். ஏனெனில், தாங்கள் செய்யும் நல்வினையால் அவர்கள் ஈட்டும் நற்பொருளும் தமதேயாதல்பற்றி. (ங)

அமிழ்தினு மாற்ற வினிதே; தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

ஆற்ற-உரிச்சொல்.

(புறநானூறு) படைப்புப் பலபடைத்துப் பல்லோரோடுண்ணு முடைப்பெருஞ் செல்வராயினு-மிடைப்படக் குறுகுறுநடந்து சிறுகைநீட்டி யிட்டுந்தொட்டுங் கவ்வியுந்துழந்து - நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து-மயக்குறு மக்களை யில்லோர் பயக்குற விலர்தாம் வாழுநாளே. (ச)

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

மெய்தீண்டலென்பது - மக்கண்மெய்யை நாம் தீண்டலும் அவர் நம்மெய் தீண்டலும் ஆகும்.

முதற்கூறியபடி-மக்கள்-ஆறும்வேற்றுமை.

பின்னற்கூறியபடி-மக்கள் முதல்வேற்றுமை.

மக்கள் நம்மைத் தழுவுதலே யதிக வின்பந் தருமென்க.

மேற்செய்யுளில் சிறுகை யளாவிய கூழ் என்றதற்கேற்ப இங்கும் மழலைச்சொல்லையுடைய குழந்தைகளென்பது பொருள்.

இன்பம்-இருவழியிலும் பெயர்ப்பயனிலை.

இரண்டாம் வேற்றுமைத்தொகையாக்கி தரும் என்னும் வினையை யொட்டி பொருள்கூறினு மிழுக்காது.

இன்பத்தை யெழுவாயாக்கி தீண்டல் கேட்டல் என்பதைப் பயனிலையாகக் கொள்ளினு மமையும்.

மற்று-வினைமாற்றின்கண் வந்ததானால் மக்கண்மெய்யை நாம்தீண்டலெனவும் அசைநிலையாகத் தள்ளினால் நம்மெய்யை மக்கள் தீண்டுதலென்வும் பொருள்கொள்க. (௫)

குழலினி து யாழினி தென்பர், தம்மக்கள்
மழலைச் சொற் கேளா தவர்.

குழல் - யாழ்-இவற்றின் ஓசைக்குப் பதிலாய் நின்றன. ஆதலால், என்ன பெயர்கள் ? மழலைச்சொல் கேட்டவர் அது குழல் யாழினும் இனியதென்பாரென்பது குறிப்பெச்சம்.

குழலினது-யாழினிது-என்பதில் அவற்றின்மீது நிந்தை தோன்றுகின்றது. (௬)

தந்தை மகற்காற்று நன்றி, யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

அவை-கற்றறிவுடையோர் கூட்டம்.

அதில் முந்தியிருப்புச் செயலாவது-தேர்ந்த கல்வி புகட்டி அன்னோர் மதிக்குமாறு செய்தல். அவை-அம்முச்சாரியைபெற்று வந்தது. மற்றப்பொருட்களைத் தேடிவைத்தல் துன்பம் பயத்திலன்றி நிலையாதென்பது முணர்க. (௭)

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை, மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

மன்னுயிர்க்கெல்லா மென்பது பிறர் கல்வியைச் சகியா அழுக்காறுடையானும் அறிவில் தன்னை முந்து மைந்தனைக்கண்டு உவப்பானென்பது கருத்து.

கல்வியறியாதவனும் பிள்ளைக்குக் கற்பிக்க விரும்புகிறான். (௮)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோனெனக் கேட்ட தாய்.